உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-குமாரதேவர்

அருளிச்செய்த

# சாத்திரக்கோவையும்,

# பெரியநாயகியம்மன் பதிகமும்,

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

அருளிச்செய்த

# நெஞ்சுவிடுதூதும்.

---

திருத்துருத்தி இந்திரபீடம் சுபாரத்தின சுவாமிகள்

ஆதீனத்திற்குரிய

## ஈசூர்-சச்சிதாநந்தசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

## பி. ஆறுமுகமுதலியாரவர்களால்

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதிசெய்வித்து

பிரதிக்கினைக்க,

சென்னை:



இரண்டாம் பதிப்பு.

மனோன்மணிவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

1898

உ

சிவமயம்

# கருத்து.

---

முக்கியகவனிப்பு:—இப்பதிப்பிற்கு முன்னர் சிலரச்சிட்டிருந்த பிரதிகளிலுள்ள இச்சாத்திரக்கோவைகளைப் பரிசோதிக்குமளவில், யாதும் வரிசைக்கிரமமா யில்லாமையாலும், ஒன்றுக்கொன்று பேதமாயிருப்பதைப்பற்றி, ஒருவாறுசந்தேகங்கொண்டு மூல ஏட்டுப்பிரதிகளில் எவ்வாறிருக்குமோ! எனவெண்ணி, சில மடாதிபர்களுக்கும், சில வேதாந்திகட்கும், சில பேரறிவுடையோர்கட்கும் அடியேன் சிரசாஷ்டாங்கமாக இக் குமாரதேவர் சாத்திரக்கோவைகட்கு மூலஏட்டுப்பிரதிகளிருக்கில் அடியேன்பேரில் தயவிட்டு அனுப்பித்துக்கொடுக்க வேண்டுமென்று பல நிருபமெழுதியும் பதில் சரிவரக்கிடைக்காமல் பிறகு ஒருவாறு துணிந்து, "அரசனெவ்வழி யவ்வழி குடிகள்" என்னும் நீதிவாக்கியத்தைக் கடைப்பிடியாகக்கைக்கொண்டு, முன்னரச்சிட்டபிரதிகளை வெகுவாய்ப் பரிசோதிப்பித்து, அடியேன் இச்சாத்திரக்கோவையை யச்சிட்டிருப்பதுடன், விருத்தசைலத்தின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் பெரியநாயகி யம்மன்பேரில் ஷை ஸ்ரீ-குமாரதேவர் அருளிச்செய்த பதிகமுஞ் சேர்த்து நன்குமதிக்கத்தக்கக் கடிதத்திலச்சிட்டுமுகிவுபெற்றிருக்கின்றன:—வேண்டுவோர்கள் சென்னை மனோன்மணிவிலாச அச்சுக்கூடத்தலைவனாகிய அடியேனிடத்திலும், சென்னை, "மதராஸ் ரிப்பன்" அச்சுக்கூடத்தலைவர் ம-ள-ள-ஸ்ரீ, சை-இரத்தினசெட்டியாரவர்களிடத்திலும், சிதம்பரம், மேற்கோபுரவீதி மண்டபத்தில் வைத்திருக்கும் அடியேன் புத்தகஷாப்பிலும், கும்பகோணம், பெரியகடைவீதியில் ம-ள-ள-ஸ்ரீ, மயிலை-அருணகிரிமுதலியார் புத்தகஷாப்பிலிருக்கும் காரியம்நாராயணப்பிள்ளையிடத்திலும் அடியிற்கண்ட விகிதப்படி பெற்றுக்கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| ஆப்பவுண்டு புத்தகம் க-க்கு | - | அணா - அ | 0 |
| கலிகோ(டை புல்பவுண்டு) புத்தகம் க-க்கு | | அணா - க0 | 0 |

கோ. மா. ரு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# ஆதீனவரலாறு.

---

துறையூர் - சிவப்பிரகாசசுவாமிகள்.

பேறையூர்-சாந்தலிங்கசுவாமிகள்,

ஸ்ரீ-குமாரதேவர்,

சிதம்பரசுவாமிகள்,

செட்டி-சிதம்பரசுவாமிகள்,

பழனிசுவாமிகள்,

கூவாலத்துச்சுவாமிகள்,

புலியூர்ச்சுவாமிகள்,

குழந்தைவேல்சுவாமிகள்,

முத்தையசுவாமிகள்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

குருபூசைநாட்கள்.

ஸ்ரீ-குமாரதேவர் = { புரட்டாசிமீ பூர்வபக்ஷம் சதுர்த்தசி.

குழந்தைவேல்சுவாமிகள். } = ஆடிமீ அசுவனி.

## சாத்திரங்களின் அட்டவணை

| எண். | சாத்திரங்களின் விபரம். | பாடற்றொகை | பக்கம். |
|---|---|---|---|
| ௧ | மகாராஜாதுறவு | ௧௧௭ | ௧ |
| ௨ | சுத்தசாதகம் | ௯௫ | ௩௧ |
| ௩ | விஞ்ஞானசாரம் | ௯௮ | ௫௧ |
| ௪ | அத்துவிதவுண்மை | ௧௦௧ | ௭௦ |
| ௫ | பிரமாநுபூதிவிளக்கம் | ௧௦௨ | ௮௯ |
| ௬ | ஞானவம்மானை | ௧௦௦ | ௯௮ |
| ௭ | வேதாந்ததசாவத்தைக்கட்டளை | — | ௧௦௨ |
| ௮ | வேதாந்ததசகாரியக்கட்டளை | — | ௧௦௪ |
| ௯ | சகசநிட்டை | ௧௧ | ௧௦௮ |
| ௧௦ | உபதேசசித்தாந்தக்கட்டளை | — | ௧௧௦ |
| ௧௧ | பிரமசித்தியகவல் | — | ௧௧௪ |
| ௧௨ | சிவதரிசனஅகவல் | — | ௧௨௨ |
| ௧௩ | ஆகமநெறியகவல் | — | ௧௨௭ |
| ௧௪ | வேதநெறியகவல் | — | ௧௩௦ |
| ௧௫ | பிரமாநுபவஅகவல் | — | ௧௩௩ |
| ௧௬ | சிவசமரசவாதஅகவல் | — | ௧௩௭ |
| — | பெரியநாயகியம்மன் பதிகம் | ௧௦ | ௧௪௧ |

சாத்திரங்களின் அட்டவணை முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

குருபூசைநாட்கள்.

ஸ்ரீ-குமாரதேவர் = { புரட்டாசிமீ பூர்வபக்ஷம் சதுர்த்தசி.

குழந்தைவேல்சுவாமிகள். } = ஆடிமீ அசுவனி.

# சாத்திரங்களின் அட்டவணை



சாத்திரங்களின் அட்டவணை முற்றிற்று.

அந்தத்தம்பிரானும் சுவாமி ? இவ்வரசனிடத்தில் அதிதீவிரப க்குவமுடைய சற்சீஷருக்குள்ள பதினெண்குறியும் உண்டாயிருக்கிறதே யென்று சைகையாகச்சொல்ல, சுவாமிகளும் (முன்பே அறிந்திருப்பதால்,) ஆனால் இவனை மது எருதுக்குப்புல்லறுத்துப்போடச் சொல்லென்று கட்டளையிட்டருள, அவ்வாறே தம்பிரான் அரிவாளும், புல்லுகட்டுங்கயிறுங் கொடுத்தனுப்ப,மேற்படி ஸ்ரீ-குமாரதேவரும் அத்திருப்பணியைச்சிரசாவகித்துக்கொண்டு வயலுக்குப்போய் பள்ளர்கள் புல்லறுப்பதைப்பார்த்து, தாமும் அவ்வாறே அறுக்க நினைத்து இடக்கையால் புல்லைப்பற்றி வலக்கையிலுள்ள அரிவாளைப் புல்லின்மேற் பூட்டாமல் இடக்கைமேற்பூட்டியிழுக்க, கை யறுபட்டமாத்திரத்தில் மேற்படி வலக்கையைப்பார்த்துக் கோபித்தார்; இவ்வற்புதக்காட்சியைக் கண்ணுறக்கண்டமேற்படிபள்ளர்கள் நீர் ஆரையா?என்று கேட்க, நான் பொம்மபுரிசாந்தலிங்க சுவாமிகள் வாகனத்திற்குப் புல்லறுப்பவனென்று சொல்ல, அதுகேட்டு அப்பள்ளர்கள் ஆச்சரியமடைந்து,இவர் அரசனைப்போலிருக்கிறதென்றெண்ணி, அப்பள்ளர்களே புல்லறுத்துக்கட்டுக்கட்டி அவர் திருமுடிமேல் வைக்க அச்சுமைபொருமல் திருமுடிசாய்ந்து போவதைக்கண்ட பள்ளர்கள் அப்புற்சுமையை எடுத்துவந்து மேற்படி மடாலயத்து வெளியில் வைத்துப்போனார்கள்.

இவ்வாறு இரண்டு நாள்சென்றபின்பு, மூன்றாவது நாள் மேற்படி புற்சுமையை எடுத்துவைத்தபள்ளன் இவர் சேதி முழுதும் கையேட்டுத்தம்பிரானுக்குத் தெரிவிக்க, அவரும் இவர் கையறுப்புண்ட சேதியை சுவாமிகளுக்குக் குறிப்பாகத் தெரி

வித்தனர்; சுவாமிகளும் ஸ்ரீ-குமாரதேவரைப்பார்த்து சோதனை நிமித்தம் முனிவுகொள்பவர்போல் கோபிக்க அவரும் உண்மையாகவேபயந்து ஒருபுறம் ஒதுங்கி இருந்துவிட்டார்.

பிறகு அன்று இராத்திரி சுவாமிகள் கையேட்டுத்தம்பிரானையழைத்து அப்பா? எங்களிருவருக்கும் வெவ்வேறே சட்டமுது கட்டி ஒரு தண்டத்தில்மாட்டி அரசனிடத்திற்கொடுத்து நம்மோடுகூட அனுப்பிவையென்று கட்டளையிட்டருள: அவரும் அவ்வாறே செய்தனுப்பிவைக்க, சுவாமிகள் முன்னும் ஸ்ரீ-குமாரதேவர் பின்னுமாய்ப்போகையில், சிலதூரம் போய் சுவாமிகள் இவரைத்திரும்பிப்பார்த்து என்ன தாமதமென்றகேட்ட, அதுகேட்டு இவரும் பயந்து சுவாமி? ஒருபுறம் அச்சுலிங்கம், மற்றொருபுறம் கறையுத்தம் இழுக்கின்றதே ! என்று சொல்ல, அக்குறிப்பையறிந்து சுவாமிகள் தமக்குத்தாமே ஆனந்தபரவசமடைந்து, பிறகு அவ்விடத்திலுள்ள ஓர் குளக்கரைமேலிறங்கி இருவரும் ஒன்றாக உட்கார்ந்து இரண்டன்னத்தையும் ஒன்றாகச்சேர்த்து ஸ்ரீ-குமாரதேவர் சுவாமிகளுக்குப் பரிமாற மேற்படி சுவாமிகள் கைவைத்தியங்கொண்டபின், சேடமான மகாப்பிரசாதத்தைத் தாமும் உட்கொண்டு, சிறிதுநேரம் அவ்விடத்தில் இருவரும் சிற்சிலவிஷயங்களை வசனித்துக்கொண்டிருந்து, பிறகு மடாலயத்திற்குவந்து சேர்ந்து, சிலநாள்கழித்து, மேற்படி சுவாமிகளிடத்தில் அநுக்கிரகம்பெற்றுக்கொண்டு சாதனைசெய்து முதிர்ந்தகாலத்தில் ஒருநாள் சாந்தலிங்கசுவாமிகள் இவரை மகராஜா என்று பெயரிட்டழைத்து, அப்பா ? நீ விருத்தாசலத்துக்குப்போகவேண்டுமென்று கட்டளையிட்டருள. அங்ஙனே கல்பித

ன்று விடைபெற்றுக்கொண்டு விருத்தாசலத்தைநோக்கி வருகிறவழியில் சின்னசேலத்திற்குக் கீழ்ப்புறமானகாட்டில் இவர்நிமித்தம் அன்புகூர்ந்து பழமலைநாதரே ஒரு பிராமணரூபமாயெழுந்தருளிவந்து தண்ணீர்ப்பந்தல் வைத்துக்கொண்டிருந்து இவரைக்கண்டு அப்பா? நீ ஆயாசமாய்ப்போகிறபடியால் கால்வலைகளுமுடயிருக்கின்றன, உனக்குவேண்டிய மட்டும் சாப்பிட்டு விடாய் நீக்கலாமென்று உபசரித்துத் தண்ணீர்கொடுக்க: இவர் அதைச்சாப்பிட்டு தாகநிவர்த்திசெய்துகொண்டு, விருத்தாசலம் வந்துசேர்ந்து, மணிமுத்தா நதிக்கரையிலிருக்கின்ற அரசமரத்து நிழலில் நடந்துவந்த ஆயாசந்தீரச்சற்று இளைப்பாறச்சயனித்து பிராணக்கு நித்திரையாயிலெழுந்தருளியிருந்தனர்.

அதுசமயம் பெரியநாயகியாரிந்து தனதபிஷேகத்திற்குச் சுவர்ணபாத்திரத்தில் வைத்திருந்த பசுவின்பாலை யெடுத்துக்கொண்டு ஒரு பிராமணஸ்திரீயைப்போல அவ்விடத்தில் வந்து தலைப்பக்கத்திலுட்கார்ந்து தனது திருமடியின்மேலிவரது முடியைத் தூக்கிவைத்து அந்தப்பாலைப் புகட்டினபின்பு, இவர் ஆயாசந்தீர்ந்து கண்விழித்துப்பார்த்து நீ ஆரம்மா? என்று கேட்க, அப்பா? குமாரதேவா? நான்தான் பெரியநாயகி, நீ எப்போதும் என்னிடத்திலேயே குமாரனாயிருப்பாயென்று திருவாய்மலர்ந்தருளி உடனே மறைந்தருளினள். பிறகு, ஸ்ரீ-குமாரதேவர், அம்மா! உன் கிருபைக்கு அடிமை யாது கைம்மாறு செய்யவல்லேன்! என்று பலவாறு ஸ்தோத்திரஞ்செய்து அங்ஙனே பரவசமாய் இருந்தார்.

இதை மேற்படி ஜடாமுனி, தேடியிருந்தபொருள் கிட்டிற்றென வெண்ணி அம்மரத்தைவிட்டுக் கீழிறங்கி பிரா

மணவுருவமாய்வந்து அதிவினயத்துடன் அடிவணங்கிநிற்க; இவர் அந்தஜடாமுனியைப்பார்த்து நீ யார்? என்று கேட்க; நான் ஜடாமுனியென்று சொல்ல; நீ இவ்விடத்திற்கு வந்த காரிய மென்னவென்று கேட்டமாத்திரத்தில், ஜடாமுனி தனதுசரித்திரமுழுதும் விவரமாகச்சொல்ல, அதுகேட்டு ஸ்ரீ-குமாரதேவரும் சந்தோஷமாய் ஜடாமுனியின் சாபநிவர்த்தி செய்து, சிறிதுநாள் அவ்விடத்தில்தானே சுரபாத்திரஞ்செய்து கொண் டிருக்குங்காலத்தில், அவ்விடத்திலுள்ள ஒரு குடும்பி யானவன், இவரை மகானென்றறிந்து நாள்தோறும் உண்மை யாய்த் தரிசனஞ்செய்துகொண்டேவர, அவனுக்கு நாளுக்கு நாள் சகலசம்பத்தும் அபிவிர்த்தியடைந்து வருகையில், ஓர் நாள், அவன் ஸ்ரீ-குமாரதேவரைக்கண்டு வணங்கி சுவாமி? அடியேனுக்கு ஏதேனும் ஓர்திருப்பணி கட்டளையிட்டருள வேண்டுமென்று வருந்திக்கேட்க, ஸ்ரீ-குமாரதேவரும் அப்பா? அப்படி உனக்கிஷ்டமிருந்தால் ஸ்ரீ-பெரியநாயகியார் சந்நி தானத்திற்கெதிராக ஒரு மண்டபங்கட்டிவையென்று கட்ட ளையிட்டருள, அவனும் அப்படியே மகாபாக்கியமென்று மண் டபங்கட்டும்படி எத்தனித்துக்கட்டும்போது உத்திரக்கல் மே லேறாமல் வருத்தமடைந்து ஸ்ரீ-குமாரதேவருக்குந் தெரிவிக்க, ஸ்ரீ-குமாரதேவரும் விபூதியைக்கொடுத்து இதை அந்தக்கல் லின்பேரில் போட்டுத் தூக்கென்றுத்தரவுசெய்ய, அப்படியே செய்து முடித்தபின்பு, அந்தக்குடும்பியும் சந்தோஷசித்தனாய் ஸ்ரீ-குமாரதேவரை வணங்கிநின்று சுவாமி? தேவரீருடைய பிரபாவத்தை யின்னதென் றளவிட்டுச்சொல்ல ஆராலாகு மென்று நானாவிதமாகத் தோத்திரஞ்செய்ய, ஸ்ரீ-குமாரதேவ ரும் அவனை அழைத்துக்கொண்டுபோய் கோபுரவாயிலிற்

செய்துவைத்திருக்கும் இரண்டு துவாரபாலகருடைய முதுகும் உரைபட்டிருப்பதைக்காண்பித்து இவர்களுக்குத் தவன கஞ்சி காய்ச்சி நைவேத்தியம் பண்ணென்று கட்டளையிட்டருள, அவனும் மகாபாக்கியமென்று அப்படியே செய்வித்துக் கிருத கிருத்தியனானான்.

பிறகு ஒருநாள், ஸ்ரீ-குமாரதேவரும், ஓர் குடும்பி வீட்டு வாயிலில் கரபாத்திரத்திற்குச்சென்று கையேந்த, அவர்கள் இவரது மகிமையை யறியாதவர்களாய் தங்கள் வீட்டில் சமைத்து வைத்திருந்த மச்சத்தை அன்னத்தோடுகலந்து இவர் கையிற்பரிமாற, அதுதெரிந்து ஸ்ரீ-குமாரதேவரும் அங்ஙனே குளத்தின் நீரருகிற்செல்ல, அந்த மச்சம் உயிர்பெற்று குளத்திற்குதித்துப்போய்விட்டது.

இப்படியிருக்க, ஒரு குஷ்டரோகியானவன் தனது தேகவருத்தம் நீங்கவேண்டுமென்று நாள்தோறும் இடைவிடாமல் ஸ்ரீ-குமாரதேவரைக்கண்டு தரிசனஞ் செய்துகொண்டேவருகையில் ஒருநாள் அதிகவாதனையினால் சகிக்கப்படாதவனாய் ஸ்ரீ-குமாரதேவரது திருவடியில்வந்து வீழ்ந்து கோவென்று அலறி முறையிட, ஸ்ரீ குமாரதேவரும் அப்பா! நாம் வயித்திய னல்லவேயென்னலும், அவனும் சுவாமி? தேவரீரது திருக்கையினால் விபூதியாகிலுங்கொடுத்தால் எனது ரோகம் நிவர்த்தியாகுமென் றிரங்கிக்கேட்க, ஸ்ரீ-குமாரதேவரும் திருவுளமிரங்கி விபூதியையள்ளி அவனது இடக்கையில் வைத்து வலக்கையால் மூடிக்கொள்ளச்சொல்லி பழமலையார் சந்நிதானத்தினுள் ஒரு யாடத்திலிருக்கும் விக்கினேஸ்வரரைக் குறியாகக்காண்பித்து, நீ அந்தவிக்கினேஸ்வரர் முன்னே போய் இரண்டு கண்களையுமூடிக்கொண்டு நின்று அங்கே

நடக்கின்ற அதிசயத்தை நமக்குவந்து சொல்லென்று கட்டளையிட்டருள: அவனும் அப்படியே போய் நின்றமாத்திரத்தில் அவனுக்குச் சுழுத்திபோற்றோன்ற, அத்தருணத்தில் அந்தவிநாயகக்கடவுள் தமது துதிக்கையைநீட்டி இவனது இடக்கையிலிருந்த விபூதியைத் தொட்டதுபோலக் கண்டுவிழித்து ஸ்ரீ-குமாரதேவ ரிடத்திற்குவந்து விண்ணப்பஞ்செய்த மாத்திரத்தில் ஸ்ரீ-குமாரதேவரும் ஆனந்தமாய் அந்த விபூதியைத் தொட்டுத் தரித்துக்கொண்டு, அவனையும் தரித்துக்கொள்ளும்படி உத்தரவுசெய்ய, அவன் அப்படியே தரித்துவருங்காலையில் அவனது குஷ்டரோகம் நிவர்த்தியாகிச் சவுக்கியமடைந்தான்.

இப்படி யிருக்கின்றநாளையில், ஒருநாள் ஸ்ரீ-குமாரதேவரும் திருவாரூர் மஹோற்ஸவத்திற்குப் போயிருந்தபோது, இரதோச்சவத்தினம் தியாகராஜப்பெருமான் இரதமேறி மாடவீதி திருக்கோலம் வருகையில், அந்த இரதத்திற்கு நேரே ஸ்ரீ-குமாரதேவர் தரிசனஞ்செய்துகொண்டிருப்பதை இரண்டு சைவர்கள் கண்டு, ஒருவர்க்கொருவர் விகடமாய் வீரசைவமருளைப் பார்த்தீர்களோவென்று பேசிக்கொள்ள, அந்தவிகட வார்த்தையை ஸ்ரீ-குமாரதேவர்கேட்டு இரதத்தில்வருந் தியாகராஜப்பெருமானைப்பார்த்து தியாகராஜப்பெருமானே! "வீரசைவம் மருளானால் இரதம் நடக்க, அருளானால் இரதம்நிற்க" என்று திருவாய் மலர்ந்தருளினவுடனே இரதம் நின்றுவிட்டது: பிறகு ஸ்ரீ-குமாரதேவர் கொஞ்சதூரத்திருந்த ஒரு மரநீழலி லுட்கார்ந்திருந்தார். இரதம் நின்றுவிட்ட சேதிதெரிந்த தர்ம்மகர்த்தராகிய தஞ்சாவூர் அரசன் இரதமானது நிலைவந்து சேர்ந்தபிறகு போஜனஞ் செய்கிறதென்னும் நிச்சயமுடைய

வருதலால், என்னசெய்வோமென் றச்சமுற்று, இவ்விடத்தில் நடந்த இரகசியந் தெரியாதபடியிருேல், சாயங்கால பரியந்தமும் அந்த இரதம்நடக்கும்படிஅனேகபிரயெத்தினங்கள் செய்வித்தும் அஃது சற்றுகிலும் அசையாது நிற்பதைப்பார்த்து, இனியென்ன செய்யக்கூடும்! இது யாராலுற்ற இடரு! அந்தோ! வீணில்விரதம் தவறுதலாகிறதே! எம்பெருமானே! என்று வியசனமுற்று மெய்சோர்ந்துவாடி பிறகு தேறியிருக்குங்காலேயில், மேற்படி அரசன் அவ்விடத்தில் நடந்த இரகசியத்தைக்கேள்விப்பட்டு ஸ்ரீ-குமாரதேவர் இருக்குமிடத்திற்கு வந்துஅவரைக்கண்டுவணங்கி விண்ணப்பஞ்செய்ய ஸ்ரீ-குமாரதேவரும் அரசனைப்பார்த்து இம் மறுளனிடத்தில் உங்களுக்கு என்ன அலுவல் போங்களென்றுசொல்ல, அரசனும் சுவாமி? இந்தப்பிழையை மன்னித்து, இரதத்தை நடப்பித்தருளவேண்டுமென்று வெகுவாகத் தோத்திரஞ்செய்ய, அதற்கு ஸ்ரீ-குமாரதேவரும் திருவுளமிரங்கி அந்த இராஜனுடனுஞ் சேனைகளுடனும் எழுந்தருளிவந்து இரதத்தின்முன்னேநின்று தியாகராஜப்பெருமானைப் பார்த்து எமது தயாநிதியே! "வீரசைவம் அருளானல் இரதம்நடக்க, மருளானல் இரதம்நிற்க" என்று திருவாய்மலர்ந்தருளின மாத்திரத்தில், இரதம் சடுதியில் நடந்து யாவருங்களிக்க நிலையிற்போய் நின்றது.

இப்பால் ஸ்ரீ-குமாரதேவர் மறுபடியும் விருத்தாசலம்வந்து அவ்வாசமரத்தின்கீழ் வாசம்பண்ணிக்கொண் டிருக்குங்காலேயில், பிரதேசத்திலுள்ள ஓர் மாந்திரீகன் விருத்தசைலத்திலுள்ள பத்திரகாளியைத் தன் கைவசமாக்கிக்கொள்ள எண்ணி வைனுய்த்தனதுநாட்டைவிட்டு மணிமுத்தாநதிக்கு வடதிசையாகவருகையில், மேற்படி பத்திரகாளியறிந்து அச்சமுற்றவ

ளாய் ஒரு ஸ்திரீயைப்போல ஸ்ரீ-குமாரதேவரிடத்திற்குவந்து அவரைப் பிரதக்ஷிண நமஸ்காரம்பண்ணி அவருக்கெதிரே நிற்க, அதுகண்டு ஸ்ரீகுமாரதேவரும் நீ யார்? என்றுவினவ; சுவாமி? நான் பத்திரகாளி, என்னைத் தன்வசஞ்செய்துகொள்ளும்படி ஒரு சண்டாளன்வருகிறான்: அதனால் பயந்துவந்தேனென்றுவிண்ணப்பஞ்செய்ய, அதற்கு ஸ்ரீ-குமாரதேவரும் என்றால் உனக்கு ஆகவேண்டிய தென்னென்றுவினவ, பத்திரகாளியும் சுவாமி? தேவரீரது திருவடிகளை அடியாள் சிரசின் மேல்வைத்தால் எனது ஆபத்துநீங்குமென்று விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீ-குமாரதேவரும் திருவுளமிரங்கி, அங்ஙனே நல்லதென்று பத்திரகாளிசந்நிதிக் கெழுந்தருளிவந்து, அந்த விக்கிரகத்தின் முடிமேல் தமது திருவடியைத் தூக்கிவைத்த மாத்திரத்தில், அம்மாந்திரீகனுடைய இரண்டுகண்களும், அவன் மனவிருள்போலவே இருளடைந்தன: அதுதெரிந்து அந்தமாந்திரீகனும் பயங்கொண்டு, இந்தஸ்தலத்தில் பெரியோர்கள் வாசஞ் செய்திருக்கின்றனர்போலு மென்றெண்ணி, அவ்விடத்தில் விசாரிக்க: ஸ்ரீ-குமாரதேவர் எழுந்தருளி யிருப்பதைக் கேள்விப்பட்டு, அவரிருக்குமிடந்தேடிவந்து, அவரைக்கண்டு வணங்கிநிற்க, ஸ்ரீ-குமாரதேவரும் அவனைப்பார்த்து நீ யார்? என்றுவினவ, சுவாமி? நான் மாந்திரீகன், நான் இவ்விடத்திற்கு இந்த உத்தேசமாய்வந்த இடத்தில், எனக்கு இவ்வகையான ஆபத்துநேரிட்டது, இதைத்தேவரீரே தீர்த்தருளவேண்டுமென்று வெகுவாகத் தோத்திரஞ்செய்துநிற்க; ஸ்ரீ-குமாரதேவரும் சற்றே திருவுளமிரங்கி அடா? உன்சரீரமுள்ளவரையிலும் இந்த மாந்திரீகத்தை விட்டிருப்பாயாகில், உனக்கு ஒரு கண்மாத்திரந்தெரிய அநுக்கிரகஞ்செய்வோமென்னலும்,

அம்மாந்திரீகனுமப்படியே நல்லதென்று ஸ்ரீ-குமாரதேவரது திருவடியைத்தொட்டுச் சொன்னவளவில், ஒருகண்தெரிந்து தன்னுடைய தேசத்திற்குப் போயினான்.

இப்பால் ஒருகுடும்பியானவன் புத்திராபேக்ஷையினால் ஸ்திரீயுந்தானும் நெடுநாளாய் வியசனப்பட்டுக்கொண்டு ஸ்ரீ-குமாரதேவரையடைந்து நாடோறுந் தரிசனம்பண்ணிவருகையில், ஒருநாள் ஸ்ரீ-குமாரதேவர் திருவுளமிரங்கி மேற்படி குடும்பிக்கு விபூதியளிக்க, அவ்விபூதிப்பிரசாதத்தால் அவர்களுக்கு இரண்டு ஆண்பிள்ளைகள்பிறந்து, அவர்கள் வளர்ந்து, ஐந்துவயதாகிப் பள்ளிக்கூடத்திலவைத்து வித்தியாப்பியாசஞ்செய்வித்தபிறகு, அந்தப்பிள்ளைகளுக்கு இலக்கணப்பியாசஞ் செய்விக்கவேண்டி இலக்கணவித்துவானாகிய சிதம்பரப்பிள்ளையென்பவரை மதுரையிலிருந்து வரவழைத்து மேற்படி இரண்டுபிள்ளைகளுக்கும் இலக்கணப்பியாசஞ் செய்வித்துவருங்காலத்தில், ஒருநாள் ஸ்ரீ-குமாரதேவர் குக்ஷிபாதை நிமித்தம் அந்தக்குடும்பிவீட்டுக்குவருகையில், மேற்படி சிதம்பரப்பிள்ளையென்னும் உபாத்தியாயர் இவரிடத்தில் மதிப்பற்று இறுமாந்திருப்பதைக்கண்டு அவரைத் தடுத்தாட்கொள்ளத் திருவுளங்கொண்டு அவரைநோக்கி, ஏர்வாக்கியத்தைக்கூறி அதற்குப்பயன் வினவ, அவருக்கென்ன வித்வசாமர்த்தியமிருந்தபோதிலும், இத்தச்சந்திதானத்தில் நாவெழாமையால் பயன்கூறுதமயங்கிநின்றுசற்றேறதெளிவுண்டாகி ஸ்ரீ-குமாரதேவரது திருவடியில்விழுந்து வணங்கி, சுவாமீ? அடிமையைமன்னித்து இரக்ஷித்தருளவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்து, அதுமுதல் துறவுபூண்டு மேற்படி ஸ்ரீ-குமாரதேவரது பின்னைச் சாயைபோற்றொடர்ந்து காளுங் கரபாத்திரம் பண்ணிக்கொ

ண்டிருந்தார், அவரது ஆராமையையும், மெய்யன்பையும், ஸ்ரீ-குமாரதேவரறிந்து அவரைத்தமது ஆசிரியரிருக்கும் திருப்பேரையூருக்குக் கூட்டிக்கொண்டு நடந்து, மடாலயத்திற்குச் சமீபமாகப்போகையில், விடியற்காலையாகையினால் எழுந்திருந்து வெளியேவந்துநிற்கிற, தம்பிரான்களைக்கண்டு, சுவாமிகளிருக்குஞ் சமைய மெப்படியென்றுவினவ, சுவாமிகள் பரநிட்டையி லெழுந்தருளியிருக்கின்றதெனக்கூற, ஆனால் நாம் பணிசெய்வோமென்று நினைத்து ஸ்ரீ-குமாரதேவர் சாணச்சட்டியெடுத்துக்கொண்டு திருமெழுகிட சிதம்பரசுவாமிகளும் திருவலகெடுத்துக்கொண்டு திருவலகிட்டார்: இத்திருப்பணி முடித்தபின்பு, சுவாமிகள் திருக்கண்விழித்தருளிய சேதிதெரிந்து இவ்விருவர்களும் மடாலயத்துட்சென்று சுவாமிகளைக் கண்டு வணங்கிநிற்க, சுவாமிகளும் ஸ்ரீ-குமாரதேவரைப் பார்த்து அப்பா ? உன்னை யடுத்துநிற்கின்றவன் யார் ? என்று வினவ, தென்னாட்டுச் சைவனென்றுசொல்ல, இவனை எனைழைத்துவந்தாய் ? என்றுகேட்க, அதற்கு ஸ்ரீ-குமாரதேவர் மௌனமாயிருந்து விட்டார் ; இப்படி இரண்டுதினஞ்சென்றபின்பு, சிதம்பரசுவாமிகளது நடையைக் கையேட்டுத்தம்பிரானறிந்து சுவாமிகளை வணங்கிநின்று சுவாமி ? இந்தச்சைவன் மிகுந்தவல்லவனுயிருக்கிறபடியால் இவனைத்திருவடிக்கு ஆளாக்கிக் கொள்ளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்குச் சுவாமிகளும் மேற்படி தம்பிரானைப்பார்த்து அப்பா ? நமக்கிருக்கிற சந்ததிபோதும் ; நமது சந்ததிக்குச் சந்ததி நெடுநாளாயில்லாதிருந்து, இப்போது கிடைத்தபடியால் அப்படியே செய்விக்க வேண்டுமென்று கட்டளையிட, அதற்குத் தம்பிரான் மௌனமா யிருந்துவிட்டார் ; இப்படி இரண்

நாள்கழித்தபின்பு, மூன்றாவதுநாள் சாந்தலிங்கசுவாமிகள் ஸ்ரீ-குமாரதேவரை அழைத்துநீ உன்னிருப்பிடம்போவென்று சொல்ல, ஸ்ரீகுமாரதேவரும் இவன் இவ்விடத்தி லிருக்கட்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, சுவாமிகள் இவ்விடத்தில்வேண்டாம், நீயே யழைத்துக்கொண்டு போவென்று சொல்ல, ஸ்ரீ-குமாரதேவரும் இவனைக்கொண்டுபோய் அடிமை என்ன செய்கிறதென்றுகேட்க, சுவாமிகளும் ஸ்ரீகுமாரதேவரைப் பார்த்து அப்பா? நீ இவனைக்கொண்டுபோய்ப் பக்குவமறிந்து உனக்குச்சொன்னதை இவனுக்குச் சொல்லிவையென்று கட்டளையிட, ஸ்ரீ-குமாரதேவரும் மகாப்பிரசாதமென்று விடைபெற்றுக்கொண்டு இருவரும் விருத்தாசலம் வந்துசேர்ந்து, பிறகு சிதம்பரசுவாமிகளது பக்குவஞ்சோதித்து அநுக்கிரகஞ்செய்தருளினார். இவர்தான் திருப்போரூர்ச்சந்நிதானம் விளக்கிய சிதம்பரசுவாமிகள்.

இப்படி நடந்துவருங்காலத்தில் பெரியநாயகியாரும் ஸ்ரீ-குமாரதேவரால் சாஸ்திரஞ்செய்விக்கும்படி திருவுளங்கொண்டு ஸ்ரீ-குமாரதேவரது பேரில்வந்து அப்பா? குமாரதேவா நீ சாஸ்திரஞ் சொல்லவேண்டுமென்று திருவாய்மலர்ந்தருள, ஸ்ரீ-குமாரதேவரும் அம்மா? அடியேனாற்சொல்ல முடியாதென்று விண்ணப்பஞ்செய்ய, பெரியநாயகியாரும் ஆனால் நாமே உனது நாவிலிருந்து சொல்லிமுடிக்கிறோமென்றநுக்கிரகித்து, அங்ஙனே இந்த ஷோடசமகாசாஸ்திரங்களையுஞ்சொல்லி முடித்தருளினார். இப்படி அனேகமகத்துவங்களைச்செய்து அந்தத்தில் ஸ்ரீ-குமாரதேவரும் சொரூபசாக்ஷாத்கார பரிபூரணநிஷ்டையையடைந்து சமயமறிந்து, இரண்டாவது அடிமையாகிய பேட்டை - சிதம்பரசுவாமிகள்

ஸ்ரீ-குமாரதேவரைப்பார்த்து சுவாமி? தேவரீர் பரிபூரணமான பின்பு அடியார்கள் தரிசனஞ்செய் துய்யும்பொருட்டு ஓர் திருப்பணி கட்டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு ஸ்ரீ-குமாரதேவர் நாம் மறைந்தும் நமதுபெயரிருக்கவேண்டுமாவென்று அகண்டபரிபூரணசாக்ஷாத்காரசொரூபவியாபகத்திற் கலந்தருளினார். இப்பால் ரெட்டி - சிதம்பர சுவாமிகளும் ஸ்ரீ-பெரியநாயகியார்கட்டளைப்படி ஸ்ரீ-குமாரதேவர் திருநாமத்தினால் கோயில்மடாலய முதலாகியதுகளுஞ்செய்வித்து, பிறகு தாமும் பரிபூரணநிலையை யடைந்தருளினார்.

ஸ்ரீ-குமாரதேவர்சரித்திரச்சுருக்கம் முற்றிற்று.

இஃது, ஷை சுவாமிகள் மரபிலுள்ள அடியார்களில்

ஒருவரால் தெரிந்து சுருக்கமாக

எழுதப்பட்டது.

ஸ்ரீ-குமாரதேவர்திருவடிவாழ்க.

---



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# நெஞ்சுவிடுதூது.



காப்பு.

தஞ்சமென்றோர்க் கின்பந் தருகுமர தேவன்மே
னெஞ்சுவிடு தூது நிகழ்த்தவே - விஞ்சும்
பழமலைவா ழாழத்துப் பாரிமத வேழக்
கழலிணைவா ரீசமே காப்பு.

கலிவெண்பா.

பூவாய்த்தகற்பகப்பூம் பொங்கரிடத்திருந்தோன்
தூவாய்த்தலைசங்கமலத் துள்ளிருந்தோன்-மாவாய்த்த (௧)

மார்பகத்தோனாகமுற்றோர் வஞ்சகக்கூற்றைக்கடந்த
சீர்பெருத்தகாயத் திறன்முனிவோ-ரோர்பெருத்த (௨)

மாணிக்கப்பைவிரித்து வாழுநாகர்பாருறைவோ
ராணிப்பொன்போன்றமறை யாகமங்கள்-பேணி (௩)

யுருவேயருவே யொளியேவெளியே
ஒருவேயருளே சிவமே-பொருளேயென் (௪)

றேத்துஞ்சுகசொருப மின்னருளேயோர்வடிவாய்
காத்துநிசெய்பேரு நயந்தருளி-சீர்த்தனென (௫)

வந்தபிரானையென் மலதிமிரம்போக்குதற்கென்
சிந்தைகுடிகொண்ட செழுஞ்சோதி-வந்தனைசெய் (௬)

யன்பர்க்கெளியா னதிகரோயாயிடினும்
வன்பர்க்கரிதாய மாணிக்க-மன்புக்க (எ)

மந்தரமேமத்தாக வாசுகியேநாணாகச்
சந்திரன்றாணுக்கடலே தாழியா-வந்தரர்தம் (அ)

வன்பிற்கடைய வருமமுதம்போன்றெழா
தன்பிற்பெருகியெழு மாரமுதந்-துன்பத் (கூ)

திரையாழிவீழ்ந்தவரைத் தீதறியாமுத்திக்
கரைமேல்விடுக்குமொருகப்பல்-விரவிவரு (க0)

மாகமேயாதி யநேகபிரபஞ்சமெலா
மேகமாய்க்காட்டு மெழிற்சிந்தன்-மாகசுர (கக)

ரேமாக்கவெம்மனோ ரியாருமிருமாக்கக்
கோமாக்கருணைமழை கூர்மேகம்-பாமரருங் (கஉ)

கண்டபொழுதேகசிந்து கசிந்துள்ளுருகித்
தொண்டுசெயமேவுஞ் சுவைக்கரும்பு-பண்டு (கங)

பிரமனகந்தை பிறங்காதடங்கப்
பரமவொளியாப் படர்ந்து-சிரமனந்த (கச)

கோடிபடைத்துக் குலவுலகெலாந்தானாய்
மூடிவிலைபெற்றமுதுகிரியா-னீடிக் (கரு)

குறிஞ்சியுணின்று குறவர்குடில்சாடி
மறிந்துவிழமாலியானை மாய்த்துச்-செறிந்த (கசா)

வகிலுங்கழைமணியு மந்திரையாலுந்திச்
சிகிநிறச்செம்பாலைவெப்பந் தீர்த்துப்-பகாரிய (கஎ)

முல்லைபுகுந்து முடைகெழுமுமாய்ச்சியர்தம்
பல்லையொத்தமுல்லை பறித்தெறிந்தங்-கொல்லை (கஅ)

தயிர்ச்சாடிமத்துடனே தாங்கிமருதத்
தியற்பள்ளரார்ப்ப வெழுந்து-வயற்புடைக (கசு)

ளேரிகுளங்க ளெலாநிறைத்துநெய்தநிலஞ்
சாரவெழுந்து தகும்பரவர்-நேரும் (௨௦)

வலைமலையெலாந் துணித்து வன்படவுதள்ளிக்
குலவுகடலோடுறவு கொண்டு-நிலவலைய (௨௧)

மாழமொடுநீள மளந்தற்கரிதாகி
யேழ்கடல்வெள்ளமெனச்சிறந்து-சூழ்குமவர் (௨௨)

தம்மையழுக்கறவே தான்றுடைத்தலன்றியுயிர்
வெம்மையழுக்கு மிகத்துடைத்து-செம்மைதரு (௨௩)

வீட்டின்பவெள்ளத்து மேன்மைபெறவேசூழ்க
நாட்டுமணிமுத்தா நதியுடையான்-மீட்டரிய (௨௪)

மெத்துகடமாதி வெறும்பொய்க்கதிட்டானச்
சத்தெனுமோர்மேன்மைத் தருநாடன்-மொய்த்து (௨௫)

வரும்பேருருவமாய் மன்னுபொருளெல்லா
மொருங்கேசுகமான ஊரான்-விரும்பியமெய்ப் (௨௬)

பத்திப்பழவடியார் பைந்தமிழ்ச்சொன்மாமலரால்
வத்திக்கக்கட்டுபொ மாலையான்-முத்திபெற (௨௭)

வோரறிவுகாணுமிடந் தொன்றென்றுஞ்சுட்டாது
சிரறிவாய்நின்றமனச் செம்பரியா-னோர்மருவு (௨௮)

பக்குவநான்கானபெரும் பாதங்கள்சோதிதர
மிக்கமறையாகமமாம் வெண்மணிகொண்-டுக்காத (௨௯)

விச்சைஞானங்கிரியை யென்னுமுத்தா னம்பொழிந்தங்
கச்சமறத்துறந்த லாசையறற்-றச்சமதா (௩௦)

கோடாகவேர்திக் குளிர்கருணைமெய்யுணர்வாம்
வீடாதகண்சண் மிகவிழித்துச்-சேடா (௩௧)

ரிரண்டற்றவத்துவித மென்னுங்கைநீட்டித்
தெருண்டதவம்பத்திச் செவிகொண்-டிருண்டபெருந் ()

காவிதோய்துண்டங் கருதாமுழகான்குகட்டி
மேவுகருவிப்படையை வெல்வதற்கு-தாவிலாக் (௬௬)

கச்சைகட்டிநற்போ கனவுதரபந்தனமே
லெச்சமறக்கட்டி யிடர்ப்பிறவி-யச்சம் (௬௭)

பிரிந்தவெனக்காட்டுமொரு பெற்றியோற்றோன்றும்
விரிந்தசடையின்றாழ விட்டு-இருந்து (௬௮)

மூயிரங்கமீதி லுயர்பரமலிங்கந்
செயலறவேதோன்றுந் திறம்போற்-பயனார் (௬௯)

மருமத்திலிங்க மகிமையுடன்றாங்கிக்
கருமந்துரிசு கழன்றே-யொருமித்த (௭௦)

நெஞ்சுடனேவீடுதொறு நீடுபிச்சையேதெனினும்
வஞ்சமறவேகரத்தில் வாங்கியுண்டு-விஞ்சுங் (௭௧)

குருபரனைக் குமாரதேவன்பால்
திருவடிபெற்றஞ்ஞானந் தீர்ந்தே-யுருநாம (௭௨)

முன்னவெலாஞ்சுத்தித் சுகமாவொருங்குணர்ந்து
தென்னியபேரின்பவெள்ளத் தேங்கியே-யின்னவிலா ()

தெல்லாஞ்சிவமாய்க்கண் டேபெற்றமாதவரு
மல்லார்திருவுடனே வாழ்ந்தாலு-நல்ல (௭௪)

விடையன்பாற்கும்ப மிருந்தெனவிதாங்கித்
தொடருமலக்குட்டி யுடன்றோய்தை-புடையெடுத்துக் ()

கம்பாந்துண்டாடி கைக்கொளிறுமைச்செங்கனிக்
கும்பமிசைநெஞ்சவைத்த கொள்கைபோ-லெம்பிரான் ()

றாளிலேநெஞ்சுவைத்துத் தாங்குமிப்போனடிக்கு
மீள்கிலாவன்புடைய வித்தகரு-மாளாத் (௭௭)

தகைமையுடையோராய்த் தக்கபணிசெய்தே
யகமுமுகமுமலர் வாருஞ்-சகசொரூப (௭௮)

மொன்றென்றேசொன்ன லுலகமேதென்றிடவே
நின்றபழுதையிடை நீளரவ-மன்ற (௫௯)

வுதிக்குமாறப்பொருளி லுண்டாமென்றோத
விதித்தபழுதை விளங்கின்-மதித்தபாம் (௬0)

பேகுமதுபோ லெழிற்சிவங்கண்டும்மூலக
மோகாதிதோன்ற லெனையென்ன-மோகமறக் (௬௧)

கானலினீரில்லையெனக் கண்டுநீர்தோன்றுதல்போ
லீனமில்பொய்யாத்தோற்ற மென்றிசைப்ப-வான (௬௨)

பழுதையினிற்பாம்பும் பகர்கானனீரு
மெழுமோதகையா யிவைதாங்-குழூமியே (௬௩)

நானுவாயோர்பொருளி னண்ணுவதேதென்றிசைப்ப
வானுதபொன்மண்ணி லாபரண-நானு (௬௪)

கடமாதிதோன்றுமொரு காரணம்போற்றோற்றுந்
திடமாநீகாணென்று செப்பத்-திடவா (௬௫)

னொருவன்றொழிலா லுளவாமிவைதா
மருவுமிவையாவ ரால்வந்த-துரையெனவே (௬௬)

விண்ணினிடைப்பீலி வெயிற்குஞ்சந்தோன்றுவபோ
னண்ணுமெனவே நயந்துரைப்ப-வெண்ணுமவை (௬௭)

பற்பலவானாலும் பகருருவொன்றாமிவைதாந்
துப்புடைநானுவுருவாய்த் தோற்றுவதென்-செப்புகெனக்

காந்தருமாநகர்போற் காணெனவேயந்நகர்தான்
போந்தவிவகார மின்றாப்பொய்யாகு-மேய்ந்த (௬௯)

விவற்றுள்விவகார மெய்வதெவனென்னக்
கவற்றுள்கனவுவிவகார-நவிற்றுதல்போ (௭0)

லாமென்றுரைப்ப வதுநினைவின்வாதனையாந்
தோமுறுபொய்வாதனைதான் றாய்தாய-சேமப் (௭௧)

பொருட்கேதெனவந்தப் பூரணத்திற்றோன்றுந்
தருக்கநினைவாகுந் தானென் - றுரைப்ப (௭௨)

வதற்குநினைவெழுமோ யாதென்றுகேட்பக்
கதித்தகனலீலை கண்டா - யிதைப்பொய்யென் (௭௩)

றன்றாதுகேட்டி யுளஞ்சற்றசைந்தக்கான்
மூன்றாம்பரமுயிர்கண் மொய்த்தெழுந்த - மன்றா (௭௪)

வுலகமிவைதோன்று முளமிறந்தாலிந்தக்
கலகமெலாம்பொய்யாய்க் கனதை - யிலகியதோர் (௭௫)

மெய்யொன்றேயாகு மினிருமுளத்துருவ
னையாவுருவமொடு நாமமாம் - பொய்யுளந்தா (௭௬)

னுன்னினைவுதீதென்றே யூகத்தாறோக்குமிடத்
தந்நினைவுநாமவுரு வாகுங்கா - ணந்நினைவு (௭௭)

கோடிகணத்திற் குதித்தெழலாலிவ்வுலகு
நாடற்கருவுருவ நாமமாய்ப் - பீடுபெறத் (௭௮)

தோற்றுநினைவைத் துணித்தாற்சற்சிற்சுகமே
மாற்றற்கரிதாய் வயங்கலுறுஞ் - சாற்றுமிதா (௭௯)

லுள்ளமேயிவ்வுலகா மிவ்வுலகேயுள்ளமா
முள்ளமலாதேயுலக மொன்றில்லை - யுள்ளே (௮௦)

மதுரந்தருஞ்சாத்தன் வன்கோயின்முன்னே
சதுரங்கமாபலமாத் தங்குங் - குதிரைகரி (௮௧)

தேராளெனும்பெயருஞ் செப்பியபேர்கொள்ளுருவு
நேராதுபொய்யென்று நீக்கியே - தேருமிடத் (௮௨)

துற்றிடுமுக்காலத்து முள்ளபடண்ணேமற்றெல்லாம்
வெற்றவெறும்பொய்யாய் விடுமிவைபோற் - சொற்ற ( )

பெயருருவமானவெல்லாம் பேறாதுநீக்கிற்
செயிரறுசித்தொன்றே திகழு - மியல்பாங் (௮௪)

கடலிற் றிரைநுரை காண்டிவலைமொக்கு
ளிடமுற்றெழினு மிதுபொய் - இடமுறுமெய் (௮௫)

யாவதெதுவென் றறியுமிடத்தப்பொருளின்
மேவுதிரைநுரை வெண்டிவலை - தாவியெழு (௮௬)

மொக்குளெனும்பெயரு மொழிபெயர்கொள்ளுமுருவு
மொக்கவெறும்பொய்யா முருசியுடன் - றக்க (௮௭)

நெகிழ்ச்சிகுளிர்ச்சிமய நீரொன்றேமெய்யாம்
பகுக்குமவைபோலப் பாரிற் - றொகைக்கரிதாய்க் (௮௮)

காணுமுருநாமங் காணுதுபொய்யாகு
மாணுறுசற்சிற்சுகமே வாய்மையாம் - மாணு (௮௯)

இருப்பதுசத்துச்சத்தா லெண்ணுருவநாம
மிருப்பதுபோற்றோன்றும்வே றில்லை - யுரைப்பரிதாய்த்

தோன்றுதல்சித்துச்சித்தாற் றோன்றுமுருநாமந்
தான்றனித்துத்தோன்றுவது தானில்லை - யான்றசுகந் ( )

தானேயுளதுநுறும் றங்குமுருநாம
மாறுசுகம்போ லணுகியிடு - நானேது (௯௨)

வேறேதுமில்லை விரிதிரையாதிகடாங்
கூறுசலமொன்றே குறிக்குங்கால் - தேறிற் (௯௩)

பொருளொன்றேயாகும் புனிதமுறுநெஞ்சாற்
றெருளொன்றிக்காணென்று செப்ப - வருளொன்று ( )

நெஞ்சடையாவென்று நிகழ்த்திவழுத்திப்பணிந்து
தஞ்சமெனப்பொருந்திச் சார்வாரு - மெஞ்சலிலா (௯௫)

தெம்மருங்குஞ்சூழ்தரவ வின்னியங்களோசையின்
சும்மைக்கடலின் றொனிகாட்ட - மெய்ம்மைதரு (௯௬)

மேரார்பரியுரண வின்போர்வடிவாகிப்
பேரோதவந்த பிரான்வந்தான் - சூரான் (௯௭)

மிடியாயிருள்போக்கு மேதகையான்வந்தான்
வடிவாலுவமையிலான் வந்தா - னடியார் (௯௮)

பவத்துயரைமாற்றப் பரிந்துவந்தான்வந்தான்
றவத்தலைவர்சற்குரவன் வந்தா - னுவக்கு (௯௯)

முதுகிரியான்வந்தான் முகிலனையான்வந்தான்
வதிதலுறுபேரின்பன் வந்தா - னதிக (௧௦௦)

கவிராசர்போற்றுங் கனைகழலான்வந்தான்
றவிராதகண்ணளியான் வந்தா - னவியாத (௧௦௧)

ஞானகிரணமுறு நற்சூரியன்வந்தா
னீனமொன்றுமில்லா விறைவந்தான் - றேனனைய (௧௦௨)

நந்துமாதேவனொடு ஞானபரன்வந்தானென்
றெற்பெருகுசின்ன மெடுத்தியம்பச் - சொற்பிரமன் ()

முன்றோரனமாய் முடிகாணவீண்டிரண்டே
ழுன்னமாக்காண்குவலென் றுங்கெழல்போல் - பொன்னோர்

கவரிபுடையிரட்டக் கண்டோர்க்கிவனை
தவரில்லையில்லையென்று சாற்று - மூவமையா (௧௦௫)

வாலவட்டம்வீச வடியார்களங்கணோய்
சாலவொட்டாதோட்டுந் தகைமையா - யேனு (௧௦௬)

மெனாதுகளங்குமுந்தி றொன்றிந்துவந்து
தனதுபணிசெய்யுந் தகைபோ - லினமருவு (௧௦௭)

முக்குடைபிழற்ற முத்திபெறவேண்டுமென்றே
ரித்திசைவாரீர்வாரீ ரென்றென்று - மொய்த்து (௧௦௮)

காத்தாலழைப்பதுபோற் காளூர்கொடிக
ளூதைத்தாற்போலெவ்விடத்து மோங்க - வுரைப்பரிய ()

மெய்யர்கரமாமேக மென்மலர்களாம்பெரிய
துய்யமழையெங்குஞ் சொரியவே - செய்ய (௧௧௦)

மறைமுடிவுகாட்டு மணியேயெமது
குறைதவிரவந்தபெருங் கோவே - நிறைய (ககக)

மதியேசெழும்பாகே வானமுதேதேனேரா
நிதியேயுலகுயிர்க்கோர் தாயே - கதியேயெந் (ககஉ)

தாதையேசெந்தருவே தண்ணளியேநாயடியேன்
தீதையேபோக்குமிருந் தெய்வமே - யோதுட் (ககங)

டிமிரதிவாகரனே செய்யமுகுதுகுன்றிற்
குமரதேவேயென்று கூறித - தமிழ்தெரிந்த (ககச)

வந்திகர்பல்லாண்டிசைப்ப மாமகரதோரணமுஞ்
செந்திருவுமோங்குந் திருமறுகி - லந்தணரி (ககரு)

மோனந்தயங்கி மொழிபொருளெல்லாந்தானு
மானந்தபோதகமீ தாங்கேறி - ஞானந் (ககசா)

தவங்கள்சிறப்பத் தருதுமாதேவை
யுவந்துபவனிவர வுற்றே - நவஞ்சேரு (ககஎ)

மவ்வீதியுள்ளோ ரனைவோருமவந்துவந்து
செவ்வியபெறவே செறிந்தெங்குந் - தவ்வாத (ககஅ)

விப்போனிகொண்டறிவ னெம்மதேருள்ளிருக்க
பொய்ம்மையறவென்றே புகழ்வாரு - மெம்மானே (கககூ)

யோர்வடிவுகொண்டறிவு வுண்மையாமெங்கனேசி
லேர்வடிவாற்காணலா மென்பாருந் - தேர்வரிய (கஉ0)

பூரணமாநோக்குவிழிப் புண்டரிகனென்பாரு
மேரிணங்குபேரின்ப னென்பாருஞ் - சீரிணங்கு (கஉக)

கற்றோர்க்கினிய கரும்புகாணென்பாரு
முற்றுமெமக்கிவனென் றோர்வாரு - முற்று (கஉஉ)

விளமையானென்பாரு மெம்போல்வார்க்குற்ற
வளமையானென்பாரு மாவிப் - புளகமுடன் (கஉங)

கொள்ளப்பணிந்தவர்கள் கொண்டாடும்வேலைதனி
னள்ளாத்தமியேயு நண்ணியே - விள்ளாது (கஉச)
மின்றிரண்டுமொய்த்ததொரு மேன்மைபோலேமிளிருந்
தென்றிரண்டுபின்றாழ்ந்த செஞ்சடையு - நன்றிதரு ()

மூன்றுபிறைநிகரா மொய்த்ததெனப்பூண்டாஞ்சே
ரான்றதிருநெற்றி யழகினையுந் - தோன்றுங் (கஉசு)
குளக்கமிலாமதிபோற் சோதிமுகமும்
வளக்கமலநோக்கினையின் வாருங் - கிளக்குமறை ()

யஞ்சமுதித்தங்கழுந்த தருநாசியையும்
விஞ்சோர்மொழிமலர்வாய் மென்னகையுந் - தஞ்சமுறு
மந்தரமோரிரண்டின் மாமுடிமேலோரிரண்டு
சந்திரபானு நலங்குவபோற் - சந்தமுறுங் (கஉஅ)

காதிணையிற்பூண்ட கனகசெப்புக்குண்டலங்க
ளோதறிவைகாட்டுமிரு திண்புயமு - மோதவிடம் (கஙo)
போக்கிமிளிரும் புனிதத்திருமிடறு
நோக்கினைக்கின்பென்ற நுவன்மார்பு - நீக்கரிதா (கஙக)

மையந்திரிவகற்றி யச்சமறநிச்சயஞ்சொற்
செய்யமுறைகொண்ட திருக்கரமு - மையநுறு (கஙஉ)
ஒவ்வாமிரண்டுந் தெருமிடத்தேகமென்று
மேவியசின்முத்திரைகொண் மென்கரமுந் - தாவிலாச் ()

செக்கர்வானம்பவளச் செம்மலையைச்சூழ்ந்ததுபோற்
றக்காவித்துகில்சேர் தண்ணிடையுந் - தொக்கவிதின் ()
மேலொருமின்சூழ்ந்து விளங்குதல்போலத்திகழு
மேலுத்தரயஞ்ஞத் தினன்னழகுஞ் - சாலவே (கஙரு)

பற்றிவிடாத பழவடியார்க்கின்பவெள்ளம்
வற்றாதளிக்கு மலர்ப்பதமும் - கற்றவரு (௧௩௫)
மாணிக்கமால்வரைமேல் வண்டுசேர்ந்ததுபோற்
காணத்திருநீற்றுக் காப்பணிந்தே - யாணிப்பொன் ()
மேனியையுமம்மேனி மீதிலேயக்கமணி
யானியிலாலிங்க மமைத்ததையு - நானேதைக் (௧௩௮)
கண்ணிணைக்கோரின்னமுதாக் கண்டுபணிந்தேத்தி
யுண்ணிணைவுதோன்று முறுபோதி - லெண்ணவொணா
மெய்யவொளிநிற்ப வினையேனோர்தானேனுக்கி
மையனருண்மாலளித்தா னென்றுமுதற் - றுய்ய (௧௪௦)
வவன்றருமின்பம்பெறவே யாசைமிகக்கொண்டே
னுவந்தவன்பாற்றாவிட வுன்போ - னிவந்த (௧௪௧)
கடல்சூழுலகனைத்துங் காணிலெனொன்றே
யிடர்போக்குந்தாநீ யின்றுந் - திடமாகச் (௧௪௨)
செல்லவேவேண்டுநெறியேயுயிர்த்துணையே
நல்லவெனக்குதவு நாயகமே - புல்லறிவா (௧௪௩)
லேயன்பிறந்திறந்த நாளெல்லாமென்றுடனே
நீயேபிரியாது நின்றதனா - லீயேயென் (௧௪௪)
றந்தையுந்தாயுந் தமரும்பெறுநட்புஞ்
சிந்தையேசெய்வார் துணைவரோ - நீதயவா (௧௪௫)
யென்பாலொருமித்திங் கேகாந்தமாயிருந்தா
லுன்போலுமென்போலு மொப்பாரா - ருன்பெருமை ()
யாகமமுமாரணமு மானபலகலையு
மியோகிகளுந்தாமே யுரைக்குங்காண் - மோகக் (௧௪௭)

கருத்தடங்கின்மூத்தியது கையகலிற்கட்டென்
றுரைத்ததரனுடைக்கென் றன்னி - விரித்து (௧௪௮)

புகழ்ந்ததலவே புகலரியநெஞ்சே
மிகுந்தபிறப்புவீ டென்றுந் - தகுந்தொகைக்குக் (௧௪௯)

காரணமுநீயே கருதுமுலகமெலா
மேரிணங்குநின்னையல்லா தில்லைகாண் - பாரிணங்கு ()

நீசற்றலைசந்தா னிசமுமுலகாரு
நீசற்றுந் தோன்றுத னின்றக்கான் - மாசற்ற (௧௫௧)

மெய்ச்சிவமேயாகு மினிருமிதானுன்பெருமை
யச்சிவந்தானே யறியுங்காண் - மெச்சு (௧௫௨)

முறவானுயர்வா லுனைப்போலெனக்குப்
பிறிதாருளாரதனாற் பேணி - யறவாழி (௧௫௩)

யான் றுமரதே வனிடா லன்புடனேதூதுசெல்ல
நான் கருதியுன்பா னவிற்றினே - னியான்புகலு (௧௫௪)

மவ்விறைவனென்று மமருமிடஞ்சொல்லக்கேண்
மௌவன்மணக்கு மலர்ச்சோலை - செவ்விதரு (௧௫௫)

முத்தாலிருமு முதுகிரியாமாங்குநீ
வித்தாரமாய்ச்செல்லு வேலைதனிற் - சுத்தஞ் (௧௫௬)

சமயமொனும்பொய்வேடர் தம்மைமிகாடி
யமருமுறவாமென் றணுகேல் - கமைமி (௧௫௭)

லரிவையர்தாமென்றியம்பு மாமாவைகாடேல்
கருதவிடயமெனுங் கானின் - மருவு (௧௫௮)

நெறிதப்பிப்போயதனு னின்றுமயங்கேல்
பொறிமத்தமாவொடுபோ ராடேல் - செறிவுற்ற (௧௫௯)

காமமெனும்பங்கத்திற் காலிட்டேல்கோபமெனுந்
தாமவழனமிதித்துத் தள்ளியிட்டே - ஞமவுரு (௧௧0)
மூன்பின்புடைபெயர்ச்சு முன்னிநோக்காதெதி
யன்பெலாமோருருவே யானவரு - மின்பமய (௧௧௧)
மாஇயிருப்போருமரியதவச்செல்வர்களு
மேகமெனுந் தனிலை யெய்தினரு - மோகமறு (௧௧௨)
வீரசைவநாயகரும் வேதமுனிவரரு
மோராகமசைவ வுத்தமரும் - பாரோரு (௧௧௩)
நாற்றிசையுஞ்சூழவர் காப்பணுறச்சூழ
மேற்றிசைபூசித்து விளங்குதற்போற் - போற்றுங் (௧௧௪)
குமாரதேவென்றுங் கோமானிருப்ப
† னமாவென்றவன்சபையையநாடி - யமாலன்பு (௧௧௫)
தன்னடிக்கீழ்வைக்கத் தருகுருவேசெய்தானைப்
பொன்னடியேன்சென்னி பொறித்தானை - மன்னு (௧௧௬)
பவளமலையுபய பாரிசத்துஞ்செம்மை
திவளருவிதூங்குந் திறம்போ - லையமார் (௧௧௭)
கழுநீர்த்தொடையல் கலந்தபயத்தானை
வழுநீத்தபாமாலை மன்னனைத் - தொழுவார்க்கு (௧௧௮)
வேண்டியவேண்டிய வெல்லாமிகவளிக்கு
மீண்டியதெய்வ மிருக்கருவை - மாண்டழியா (௧௧௯)
வானத்தசெல்வ மளிக்குஞ்சிந்தாமணியை
வானோர்துதிக்கவரு மாதவத்தை - தீனனே (௧௨0)
னேதுபிழைசெய்தாலு மேழையேனுக்கிரங்கித்
தீதனிவனென்னாத தெய்வத்தை - யோதும் (௧௨௧)

---

† நமா என்பது நமஸ்காரம்.

யின்றிவளுக்கீத லெழில்வள்ளாலென்றியம்பி
நன்றெனவேசம்மதிப்ப நன்குரைத்து-மன்றலுறு ()

சற்குமாரதேவன் றருங்குவளைமாலைநெஞ்சே
யிற்பெறவேவாங்கிவா வின்று (௪.௮௬)

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள் நெஞ்சுவிடுதூது

முற்றிற்று.

———:0:———

துதி.

எவ்வுயிர்க்குந் தாயா யிருந்தின் பருளிக்குஞ்
செவ்விதரு சற்குமார தேவன்பா-லவ்வியந்தீர்
நெஞ்சமே செங்குவளை நீண்மாலை வாங்கிவரச்
செஞ்சவே தூதாகிச் செல்.

ஸ்ரீ-குமாரதேவாயநம:

———

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீகுமாரதேவர் அருளிச்செய்த

சாத்திரங்கள் பதினாறனுள்

முதலாவது

# மகாராஜாதுறவு.



## பாயிரம்.

[கணபதிமுதலிய ஐவர் வணக்கம்.]

அமரர்கள்பரவுந் திருமுதுகுன்றி லாமுத்துப்பிள்ளையைத் தெரிக், குமாரசற்குருவையிமகிரிராஜ குமாரியாம்பெரியநாயகி யை, * மும்மலமுமொருங்கேயகற்றிமுக்கண்முதல்வனைச் சாந்தநாயகனை, நடமெதனைப்படியே முடிக்கிடத்தினைமு நாதனின்றிறைஞ்சிவாழ்த்துவாம். (க)

[முக்குருவணக்கம்.]

மறைமுடிவுதனில்விளங்கு மொளியே மனிதனாய்ப்போலவந்தெனது, சிறைதவிர்த்தாண்ட சிவப்பிரகாச தேசிகன்றன்னைமற்றவன்றன், நறைமலரடியைப் போற்றிடுஞ்சாந்தநாயகன்றன்னைமற்றவன்றன், நிறையருள்பெற்ற பழனிமாமுனியை நெஞ்சினுளிருத்தியேபணிவாம். (உ)

---

* ஆணவம், காமியம், மாயை ஆக – ௩.

[ஆழத்துப்பிள்ளையார் துதி.]

தொய்யின்முலைக்கோ டிரண்டுகவான் றுதிக்கைமூன்று விழிதுரிசில், துய்யசைவமுதன்மதமுந் துலங்கவருமொண் பிடியுலகம், உய்யவுதவுமொருகளிற்றை யுலவாவிருத்தசைலத் தில்,வையம்பரவுமாழத்து வாழைங்கரனை மனநினைவாம். (௩)

[விருத்தாம்பிகை துதி.]

(வேறு.)

இருட்கலிவலியின் ஞானநன்னெறிக ளிறந்துயிர்கொடு நெறிமேவி, மருட்கொடுகலங்கா வகைகலியென்றும் வந்தனு காப்பதிதன்னில், தெருட்சத்திகருணை யுருவதாய்நின்று தெளிவிக்குமிறைவியெங்குருவோர், அருட்கடல்பெரிய நாயகியுல்குக் கனைமுதல்வியைப் பணிந்திடுவாம். (௪)

[சபாநாயகர் துதி.]

திங்களார்சடையிற் கங்கைநீர் துளிப்பத் திருந்திழையுமையுளங்களிப்பப்,பொங்கராவொடுநற் புலிமுனிவர்கண் மால்போதயனமரர்கள் போற்றத், தூங்குநான்மறைக டுதித்திட வைந்து தொழில்விரிந்திடப் பொதுவதனிற், செங்கழலதிர நடஞ்செயும்பொருளைத் தினம்பணிந்திடவொழித்திடுவாம். ()

சிவகாமியம்மை துதி.

(வேறு.)

அருளுருவாயுயிர்கடமக்கன்னையாகி யஞ்ஞானந்தனை யகற்றியமலமாகி, மருளில்தாய்மெய்ஞ்ஞானமாகுமுத்திவாய்த்திடவேகாத்தருளிவாறேரேத்த,இருள்கெடவேமிளிருமிருங்கழல்களார்ப்ப விறைபுரியுந்திருநடத்தாற் களித்துவாழுந், தெருண்மருவுமறைநான்கும் பாவுந்தில்லைச் சிவகாமசுந்தரியைச் சிந்தைசெய்வாம். (௬)

[விநாயகர் துதி.]

(வேறு.)

செக்கர்போன்ஞெளிர்முக்கட்சிலம்பினை
மிக்கபேரருள்வேலையையோர்கொம்பால்
தக்கவன்பர்க்குதவுந்தருவினை
இக்கதைநிறைவேறவிறைஞ்சுவாம். (எ)

[சுப்பிரமணியர் துதி.]

(வேறு.)

கடிகமிழ்கரியகூந்தற்கனிமொழித்துவர்வாய்த்தெய்வப்
பிடிதனக்கோட்டால்வள்ளிப்பெண்கொடிபடருஞ்செய்ய
படிபுகழ்புயமாங்குன்றிற்பாயவண்கழூநீர்நீப
மடலவிழ்செழுந்தார்ச்செவ்வேண்மலரடிவணக்கஞ்செய்வாம்

[அடியார்துதி.]

(வேறு.)

வண்டுழாயலங்கன்மாயவன்மலர்மேல் வதிந்தநான்முகன் மறையறியாத், தொண்டைவாய்க்கெண்டை விழிக்கழைமொழியொண் டொடியிடையுமையையோரிடத்திற், கொண்டகோனருளைப் பொருளெனக்கருதிக் குலவியசாதனந்தரித்து, மண்டியவடியார்யாவர்மற்றவர்தாண் மனத்தினுஞ்சிரத்தினும் வைப்பாம். (௮)

[அவையடக்கம்.]

(வேறு.)

சகரர்தம்வலியையுந்தடந்திரைக்கடல்
அகலமும்பின்புளோரக * ழிலஞ்சிதான்

---

* இலஞ்சி - குளம்.

புகழுறவிளக்கலேபோலவிச்செயுள்
தகைதருகலைஞர்நூறனைவிளக்குமால். (௧0)

[நூனுதலியபொருளும், நூற்பயனும், நூலாசிரியர்பெயரும்.]

(வேறு.)

திங்களொண்கவிகைத் திகிரியந்திணிதோட்டிகழ்கடற்று
னைமாராஜன், அங்கண்மாநிலத்திற்றுறந்து வீடடைந்தவரிய
விக்காதையைத்தமிழால், இங்குமாதவத்தோ ரிசையுமென்றி
சைப்ப விசைத்தனவீடுறக்கேட்டோர், கொங்கவிழ்பொழில்
சூழ்பழமலையுறையுங்குமாரதேவென்னுமாமுனியே. (௧௧)

[வாழ்த்து]

(வேறு.)

சிவன்றிருவுருவாமைந்துசின்மயவெழுத்தும்வாழி
நவந்தருநீறும்வாழிநயனநன்மணியும்வாழி
கவின்றருங்குமாரதேவன்கழலிணையிரண்டும்வாழி
அவன்றிருவடியார்தம்மோடாருயிரனைத்தும்வாழி. (௧௨)

பாயிரம்-முற்றிற்று.

---

## நூல்.

[நைமிசாரணிய வாசிகளாகிய சவுனகாதிரிஷிகள் மஹா
ராஜன் சரித்திரஞ் சொல்லும்படி வேண்ட சூதமஹா
முனிவர் சொல்லத்தொடங்கல்.]

(வேறு.)

தருக்கிளர்நைமிசாரணியத்திற்றங்கிய முனிவர்கள்சூதன்,வ
ரப்பணிந்தேத்திக் கதைகள்பற்பலவாவகுத்துரைத்தனைமஹா
ராஜன், திருக்கதையெங்கட்குரைத்திலையதுநீசெப்பெனச்சரு
தியிற்சொல்லுஞ், சுருக்கமில் காதை யிதுவெனத்தொகுத்துத்
தோமறக்கேண்மினென் றுரைக்கும். (௧)

[இதுமுதல்-எ-பாட்டாலும் அரசன் சிறப்புக்
கூறப்பட்டது.]

குழைத்ததண்சினைத்தேமாவின்றண்கனித்தேன் குலவிய
பலவினற்பலத்தேன், தழைத்திடுகதலிப் பழமுருத்திடுதேன்
மூன்றிரண்டிலஞ்சியிற்றதும்பி, விழுத்தகுவயலிற் பாய்தரவி
ளையுமிகுகருநாடதேசந்தான், இழைத்தநற்றவத்தாலுயிரெலா
ம் புரந்தங்கிருந்தரசாளுமோர் குரிசில். (௨)

(வேறு.)

மஞ்சமரிஞ்சிசூழ் மாபுரத்திருந்
தெஞ்சலிலென்னடிமை யிறைவர்தாடொழுந்
தஞ்சமென்றடைந்தவர் தம்மைக்காத்திகல்
வஞ்சகர்க்காய்மஹாராஜமன்னனே. (௩)

(வேறு.)

தருநிழலரசுவைகுஞ்சதமகன்றிருவின்மிக்கான்
உருவினின்மதனின்மிக்கானுலத்தினிற்பலத்ததோளான்

செருவினிலரியேறன்னான்றேனொடுஞிமிறும்பாட
முருகுடைந்தொழுகுந்தாரான் மூவுலகளிக்கும்வேலான். (௪)

(வேறு.)

அரசர்வந்திடுதிறைநயளக்குமுன்றிலான்
முரசுகளனுதினமுழங்குமன்றலான்
கரைபொருதிரையெறிகடலந்தானையான்
அருவரைமார்பினான்யாளிமொய்ம்பினான். (௫)

அரசர்தம்முடியுழுதவிருந்தாளினான்
எரிதவழ்திகிரியையேந்துந்தோளினான்
மருவலர்வலியினைமாற்றும்வாளினான்
தருநிதிக்கொடையினான்றருக்குநாளினே. (௬)

(வேறு.)

கவரியோடாலவட்டங்காரிகையார்கள்வீசப்
பவளவாயரம்பையன்னார்பாகடையுதவமுத்தத்
தவளவாணகையார்கீதந்தனிநடஞ்செய்யநின்று
குவலயமன்னர்போற்றக்குரைகடற்றானைசூழ. (௭)

இந்திரனாலயம்போலிலங்கியமண்டபத்தில்
சுந்தரமிருகராஜன்சுமந்தபூவணையின்மீது
வந்திருந்தவனிதன்னைமனுநெறிமுறையிற்காத்தே
அந்தமில்போகந்துய்த்தங்கிருந்தனனரசர்கோமான். ( )

[அரசன் றனக்குப் புத்திரனில்லாமையால்
வியாகுலமுறல்.]

தூம்புடைப்பிறையெயிற்றுத்தந்தியீராயிரந்தோட்
பாம்பினாற்பரிக்கலுற்றபாரினைப்பரிக்கப்பின்னர்

மேம்படுபுதல்வர்நந்தம்வீறுடைவயிற்றில்லென்று
தேம்படுதெரியன்மார்பன்சிந்தையாகுலங்களுற்றான். ()

[இதுமுதல்-உ-பாட்டானும் தீர்த்தயாத்திரைமுதலிய
புண்ணியங்கள் செய்தமை கூறப்பட்டது.]

கங்கையேமுதலாமிக்ககடவுண்மாநதியிற்றோய்ந்தும்
பங்கயாசனன்மாறிங்கட்பவளவார்சடையான்றன்னை
அங்கையாற்பூசைசெய்துமதிதிகட்களித்துந்தீயில்
பொங்குமாகுதிகளீந்தும்பூவலம்வந்துந்தேவர். (கo)

ஆலயஞ்சாலையக்கிராரநந்தனவனங்கள்
கோலமாரிலஞ்சிகூபங்குளம்பலசெய்துமீரெட்
டேனுமாதானத்தோடேயிரணியமுதலீரைந்து
சாலநற்றானமீந்துந்தருமமெண்ணான்குசெய்தும். (கக)

[இதுமுதல்-உ-பாட்டானும் புத்திரோற்பத்தியும் சாதககன்ம
முதலியன செய்தமையுங் கூறப்பட்டன.]

தவம்பலபுரிந்தும்வேந்தன்றனயனைப்பூத்தபின்னர்ப்
பவந்தனைத்துடைத்தேன்மேலாம்பரமநற்பதமுமுண்டென்
றுவந்துசாதககன்மத்தோடொழிவறுகருமமெல்லாம்
நவந்தரச்செய்துநாமநன்மஹாராஜனென்றே. (கஉ)

(வேறு.)

வேதநீதியிற்கூறுவியன்றர
ஓதவெண்ணெண்கலையுமுணர்த்துவித்
தேதமற்றகுரவற்கிரணியம்
போதுமென்னப்பொழிந்தனன்கொண்டல்போல். (கங)

[இரதமூர்தல் முதலியவற்றிற் பயிற்றுவித்தலும், விவாகத்துக்குப் பிரயத்தினஞ்செய்தலுங் கூறப்பட்டன.]

கொடிநெருங்குங்கொடிஞ்சியந்தேர்பரி
கடிமலிக்கயமொண்சிவிகையிப்
படியிலூரப்பயிற்றுவித்தாசிலா
வடிவிலங்குமகற்குமணஞ்செய்வான். (௧௪)

[அரசர்களுக்கு விவாகபத்திரமனுப்புதலும், அவர்கள் வந்துசேர்ந்தமையுங் கூறப்பட்டன.]

மடங்கலன்னபலமுள்ளமாமன்னன்
இடங்கொளொண்ணெழுதேசத்திறைவர்க்கு
முடங்கல்போக்கினன்கண்டுமுடிமன்னர்
நடங்கொள்சேனைகள்சூழ்வரச்சார்ந்தனர். (௧௫)

[இதுமுதல்-உ-பாட்டாலும் நகரமலங்கரித்தல் கூறப்பட்டது.]

(வேறு.)

வடிகொள்வெண்சுதையாற் பித்திகைதீற்றி வாறுறமணிக்கொடிநிரைத்துக், கடிநறுஞ்சாந்தங்குங்குமந்தன்றைக் கமழ்தரமறுகெலாமெழுகிப், பொடிகொள்சிந்தூரத்தாற் கோலமேபுனைந்து பூமலர்பொரிகளிசிதறிக், கொடிகொண்மூதெயின்மேன் மாடமொண்சிகரிகோபுரப்புதுக்கியேகுலவ. (௧௬)

(வேறு.)

கதலியுங்கமுகுநட்டுக்காவணமலங்கரித்துப்
புதியதோரணங்கள்கட்டிப்பொற்குடஞ்செறித்துத்தீபம்
இதமுறவெங்கும்வைத்தேயிந்திரநகரம்போல
மதுமலர்த்தாமநாற்றிமாபுரியலங்கரித்தார். (௧௭)

[இதுமுதல்-௩-பாட்டாலும் பெண்ணின் சிறப்பும்,
விவாகஞ்செய்தலுங் கூறப்பட்டன.]

(வேறு.)

வில்லிலங்குகைவேந் தர்மரபினில்
நல்லசாமுத் திரிகநூலனன்கதாச்
சொல்லிலக்கணத்தோடுதுரிசிலா
முல்லைமாலைமுருகுவிரியவே. (௧௮)

(வேறு.)

மூவுலகதனிலுள்ளமுகிழ்முலைச்சுருங்கட்செவ்வாய்ப்
பாவையவொழிவிற்போதன்பகுத்தெடுத்துயிரோடேய
ஓவியந்தீட்டிநன்றென்றுலகினிலுலாக்கச்செய்ய
பூவுறைதிருவிரும்பும்பொற்புடனவதரித்தே. (௧௯)

(வேறு.)

இலங்கியவாவொண் டளிர்க்குழைந்திணிய விருதனக்கோங்கிணையரும்பி, நலங்கிள * ராம்பல் குமிழிரு குவளைகண்ணு செஞ்சரோருகம்பூத்துத், துலங்கிய புயலைச்சுமந்திரு தாளாம் ஜோதிலாபின்வொளை நுடங்கிப், பலந்தரப்படருங் கொடியினை வேதப் பண்பினின்மன் றல்செய்வித்தே. (௨௦)

[மஹாராஜனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தல்.]

அருந்ததிகணவன் முதன்முனிவர்க ளருமறைக்கிழவர் கடம்மால், பொருந்தியகங்கைப்பூம் புனலாட்டிப் பொன்சேய

* ஆம்பல் - அதரத்துக்கும், குமிழ் - நாசிக்கும், குவளை-கண்ணுக்கும், சரோருகம் - முகத்துக்கும், புயல் - கூந்தலுக்கும் உவமை.

மணிகளார்குயின்ற,விரிந்திடமுடங்கன்மென்றவிசேற்றிமிளிர்
நவமணிமுடிகவித்துப், பருந்தடர்வேலான் பௌவமார்புவி
யைப் பரிவெனத்தோன்றல்பாலளித்தான். (உக)

[மஹாராஜன் மனைவியோடு வாழ்ந்திருந்தனனைச்
சூதமஹாமுனிவர் சொன்னதைக்கேட்டு, இரு
டிகள் பின்னும் வினவச் சூதமஹாமுனி
வர் சொல்லத் தொடங்கல்.]

சோகமேயின்றியிருந்தனன்வேந்தன் றோன்றலும்பார்பொ
றாநீக்கி, ஏகமாச்செங்கோ லெங்கணுஞ்செல்ல வெண்குடைசவி
சயமுஞ்செய்தே,மாகநாடென்னப்போகமேதுய்த்து மடந்தை
யோடிருந்தன னென்றான், வாகைவேலவன்பினென்செய்தா
னென்ன மறையவர்க்குயர்முனிவருக்கும். (உஉ)

[இதுமுதல்-உ-பாட்டாலும் மஹாராஜன்முத்திக்கு ஞானமே
சாதனமென் றுணர்த்தல் கூறப்பட்டது.]

மனைவியுந்தானுமோர்கிளைவாகி மாறுபாடின்றி யோங்கா
லுங், தனையுணர்யோகத்தைத்தாய் கடவுடங்கனையறுங்கைபி
றைந்துசி, அனையவருரைத்த நெறிதனிணடக்கு மருத்தங்கண்ம
னதினிற்றரித்தும், வினையமதுடனே நான்முறையவாவினை
வியுஞ்சிலபகல்போக்கி. (உங)

தனியிடமதனி லிருந்திருவர்களுந்தங்களிற்றுருமுணர்ந்து
சாவித்,துனிசெய்மாயையைப் பிறப்பதுநீங்கிச் சுகமதையடை
ந்தனுதினமும், இனிமையதாகவிருக்கலா ஞானத்தென்றெண்ணி
ஞானிகட்சார்ந்து,நனியவர்பாதபூசனைபுரிந்துடனாடுறும்வினை
வினர்நன்றாய். (உச)

[இதுமுதல்-௯-பட்டாலும் அஞ்ஞானம் சற்குரு சேவையின்றி விளங்காதெனத்துணிதல் கூறப்பட்டது.]

இருவரிலாசன்றனக்கறிவோங்க*விருவகைச்சார்வையுமகற்றிக், கருவுடற்காவறனையுங்கைவிடுத்துக் கருத்தசையாதுமெய்யுணர்வை,மருவிடிலகப்பற்றற்றுமேல்வீடு வாய்த்திடுமதற்குமெய்ஞ்ஞானக்,குருவருளின்றி விளங்கிடாதெனவே கொண்டனன்மனத்தினிற்றுணிவே. (௨௫)

மனைதனிலாசைபொருந்தியேநின்று § மகிதனின் ஞானியாமெனவே,துனைமிகமதிப்போன்றன்னைவந்தொருவன் றந்திஞானமென்றிரந்து, வினவன்மட்டையினைப் பருகுவோன்றன்னை வேண்டித்தென்னம்பழந்தனையே, இனம்பணித்திரிவோன்புத்திபோன்மெனவே யியம்புவர்முற்றுணர்பெரியோர்.

வேதவாகமசாத்திரபுராணங்கள் விளங்கவேகற்றுணர்ந்தவர்றைந்,தீதறவெவர்க்குந்தெளிவுறவோதிச்செப்பிய வந்நெறியதனிற்,சாதகமிலாதகுருவினையொருவன் றானடைந்தானந்தம்விளைவல், ஏதமாங்கழுதைதன்னைக் குங்குமத்தினியல்புகேட்டிடுதல்போன்மென்றே. (௨௭)

[சற்குருவையடைந்து விண்ணப்பித்தல்.]

சீவர்களிடத்திலருள்சிவபத்தி திருந்தியதுறவுமெய்ஞ்ஞானம், ஆவதோர்வடிவாம்வேதமாமுனிவைய யாமலைவாரணியத்திலடைந்தே, தேவர்கட்டேவுதன்பமோர்காலுஞ் சென்றிடாமுத்திதானெய்திச், சாவதும்பிறப்புநீங்குமோர்நெறியைச் சாற்றெனத்தாழ்ந்திடமுனிவன். (௨௮)

* இருவகைச் சார்வு=உயிர்ச்சார்வு, பொருட்சார்வு. (வைராக்கியதீபம்)௨௯-வது பாட்டில் காண்க. § மகி-பூமி.

[சற்குரு மாணாக்கனுக்கு உபதேசித்தல்.]

இருவகைச்சார்வாம்புறப்பற்றை நீக்கி யிச்சையின் விட்ட
தினிவினைவு, மொருவியேயுடற்காலையுங்கைவிடுத்தே யுட்கர
ணங்கள் வாதனையும், குருவருளொழியே பொடுக்கிடல்வீடுங்
கூடுந்தாணுகவேயவத்தின், கருவழிந் திடுமிந் நெறியையிங் கிவை
விற் கைக்கொண்டுசெல்லெனவுரைத்தான். (௨௯)

[மஹாராஜன் சிலகாலத்தின்பின் தனித்திருந்து
உபதேசமொழிகளைச் சிந்தித்தல்.]

* அந்நெறிகுருவாலையமுந் திரிவு மகன்றிடத் தெளிவுதாக்
கேட்டு, முன்னெறியான வரசியற்கையினின் முயன்றனன்
சிறிதுநாளொருநாட், பின்னெறியதனை நினைந்தவையும்
பெயர்ந்திடவிடைகொடுத்தரசன், மன்னெறிக்கோல மகன்றந்
தப்புரத்தில் வதிந்தனனொருவனாய்த்தனித்தே. (௩௦)

[இதுமுதல்-உ-பாட்டாலும் தன்னைவந்து கண்ட அரசர்
முதலாயினோர்க்கு இனி அரசியற்றலை வேண்டாது
துறவுபூண்டு வீட்டையடைவேனென்பது
கூறப்பட்டது.]

அரசர்களமைச்சர் புரோகிதர்பெரியோ ரனைவருமங்கிட
த்தேகி, அரசனைநோக்கி நித்தியகருமமகன்றுவாளாயிருந்திடு
தல், அரசிலக்கணமன் றெனவவர்வேண்ட வவர்களைநோக்கி
யேவேந்தன், அரசியற்கையினை வேண்டலனென்னையறியவே
வேண்டினனன்றே. (௩௧)

ஆண்டதோ ரரசுதனிலும்போகத்து மாசையற்றேனினி
வேண்டேன், மாண்டதோர்வனத்தி லொருவனாய்த்தனித்தே
மனத்தசைவறுத்துவீட்டையடைவேன், பூண்டவென்மனமிங்கினித்

---

* இப்பாட்டு - மெல்லினவெதுகை.

